உ
கடவுள் துணை.

விநோத

# ஜாலக்கண்ணாடி.

மூன்றும்பாகம்.

இஃது,
சிறுமணவூர்,
முனிசாமி முதலியார்
அவர்களால்
இயற்றப்பட்டு,



தமது
சென்னை ரூலை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1908.

60





கடவுள் துணை.

# விநோதஜாலக்கண்ணாடி.

### காப்பு-விருத்தம்.

பருவமதி செஞ்சடையான் கிருபையாலும்
பராபரியே யென்தாயார் அருளினாலும்
சர்வமறை யதிகாரி வாணியாலும்
சண்முகமும் கணபதியு முதவியாலும்
திருமாலும் லட்சுமியாள் கிரத்தாலும்
தேன்போலே முன்னிரண்டு பாகஞ்சொன்னேன்
சிறுமணலூர்பேர்விளங்க முனிசாமிதான்
செப்புகிறேன் இதுமூன்றும் பாகந்தானே.

### குடம் தின்னுஞ் சாலம்.

பாரப்பா சிறுபூளை யென்றவேரும்
பண்பான குப்பைமேனிவேரும்
சேரப்பா வாயிலே மென்றடக்கி
சபையிலே வந்துஒரு வார்த்தைகேளு
வாரப்பா குடம்நிறைய தண்ணீர்விட்டு
வைத்தருகே யுட்கார்ந்து குவளைக்கொண்டு
தூரப்பா ஜெலமெல்லாங் குடிக்கலாகும்
குடித்தபின்பு குடத்தையுமே தின்னலாமே.

(வ-ம்) சிறுபூளையென்ற வேரும் குப்பைமேனி வேரும் வாயில் போட்டு மென்று அடக்கிக்கொண்டால் ஒரு குடம் தண்ணீர் குடிக்கலாம் அந்த குடத்தையும் தின்றுவிடலாம். 30

### பால் உதிரமாகுஞ் சாலம்.

தின்னபின்பு யின்னமொரு ஜாலங்கேளு
திடுக்கிடுவார் கண்டவர்கள் திகைத்துநிற்பார்
பன்னவே தம்பலத்தின் பூச்சியப்பா
பசுவருந்தும் புல்லிலே கலந்துவிந்தால்

பின்னமடா பாலதனேக் கரந்தாராகில்
பாலெல்லாம் உதிரம்போல் சிவந்திருக்கும்
மென்னமோ தெய்வகுற்ற மென்றேசொல்லி
யெண்ணிமே பலவிதமாய் கவனிப்பாரே.

(வ-ம்) தம்பலப்பூச்சியை கொண்டுவந்து புல்லில்கலந்து பசுவுக்குக்கொடுத்தால் அதைத் தின்றவுடன் பாலைக்கரந்தால் இரத்த நிறமாயிருக்கும்யாவரும் ஆச்சரியப்படுவார்கள். 31

மேற்படி உதிரத்துக்கு மாற்று.

நினைப்பார்கள் பலவிதமாய் கவனிப்பார்கள்
நீயதற்கு மாற்றுடனே சொல்லக்கேளு
தனியாகத் தொட்டியிலே ஜெலத்தைவார்த்து
தயவாகச் சுக்கதனைத் தூளாய்ச்செய்து
குணமாகஜெலந்திலே தூளைத்தாக்கி
குடிப்பாட்டிக்கரந்தாக்கால் வெளுத்துப்போகும்
பிணையாக யின்னமொரு வித்தைகேளு
பிரியமாய்கேழ்க்கவதை பேசுவேனே.

(வ-ம்) ஒரு தொட்டியில் நல்லஜெலம் ஊத்தி சுக்கு தூள்செய்துபோட்டு கலைக்கி குடிப்பாட்டின பிறகு கரந்தால் பால் எப்போதும்போல வெள்ளையாயிருக்கும். 32

சங்கிலியுருவும் சாலம் வேறுமுறை.

வாகானபச்சையென்ற தவளைநெய்யும்
வளமானவெங்காயச் சாறுஞ்சேர்த்து
வேகமாம்குமரியுட சோறுங்கொண்டு
விதமானவெந்தியமும் உப்புஞ்சேர்த்து
பதமாகவிளக்கெண்ணை தனிலரைத்து
பருந்தனலில்சங்கிலியை காயப்போட்டு
மிதமாகயெண்ணைதனை கையால்வாரி
உருவடாசங்கிலிதான் யெறியும்பாரே.

(வ-ம்) பச்சைத்தவளைநெய்யும்வெங்காயச்சாறும் கத்தாழைசோறும் வெந்தியமும் உப்பும் விளக்கெண்ணையில் கரைத்து நெருப்பில்காய்ந்த சங்கிலியை உருவினால்குப்பென்று யெரியும் கைவேகாது. 33

முள்ளின்மேல் நடக்குஞ் சாலம்.

பாரப்பாஒரிலை தாமரையின்வேரும்
பாங்கானசெப்பு நெருஞ்சென்றவேரும்

சேரப்பா தலைமாற்றி குளிசமாட்டி
செம்பினாற்குளிசமதை வாயில்போட்டு
சேரப்பாமுள்ளின்மேல் நடக்கலாகும்
நெருக்காதுபொத்தாது பூப்போலாகும்
ஆரப்பாயிம்முறையை செய்யமாட்டார்
அம்மை கருக்குவழக்கமது அறிந்துகொள்ளே.

(வ-ம்) முள்ளி தாமரையின்வேரும் செப்புநெருஞ்சிவேரும்தலை மாற்றி செப்புகுளாயில்போட்டு குளிசமாடி வாயில்போட்டுக் கொண்டு முள்ளின்மேல் நடக்கலாகும். 35

## கோழிசண்டை ஜாலம்.

கொள்ளவேநத்தையென்ற சூரிதன்னை
கொண்டுவந்து ஒருமாதம் நீரில்போட்டு
விள்ளவேமாதமது சென்றெடுத்து
வெண்ணைபோல் அரைத்துநல்ல சாவலுக்கு
உள்ளுக்குக்கொடுத்துசண்டை விட்டுப்பாரு
ஒருகாலும்யெதிரியினை வெல்லலாகா
அல்லவேகத்திகட்டி விட்டபோதும்
அறுபடாதுசொல்லியென்ப தருமைதானே.

(வ-ம்) எத்தைச்சொன்னாலும் கேழ்க்கும் நத்தைச்சூரி வேருடன் சமூலமுங்கொண்டுவந்து நீரில்போட்டு ஒருமாதம்சென்று எடுத்து சண்டைசாவலுக்குகொடுத்து கத்திகட்டிவிட்டாலும் தோற்காது எதிர்சாவலுடைய கத்திபட்டாலும் அறுபடாது நத்தைச்சூரியைத் தனியாகவாவது ஆகாரங்களோடாவது உள் ளுக்குசெலுத்தவும். 36

## ஆடு துடருஞ் சாலம்.

தானென்றகோவையிட யிலையுங்கொஞ்சம்
தன்வேறேவடக்கோடும் வேருங்கொஞ்சம்
வீனென்றசிறுநீர்விட் டரைத்துக்கொண்டு
விதமாகக்கையிரண்டும் தடவிக்கொண்டு
கோனென்றஆடிருக்கும் யிடத்தைச்சேர்ந்து
கொட்டப்பாகையிரண்டும் தட்டினக்கால்
ஏனென்றுஆடெல்லாம் துடரும்பின்னே
யெல்லாமேதந்திரம்பார் மந்த்ரமேது.

(வ-ம்) கோவைசெடியின் வடக்கேபோகும் வேர்கொஞ்சமும் அதின்இலை கொஞ்சமும் கொண்டுவந்து சிறுநீர்விட்டுநன்று

யரைத்து இரண்டுகைகளிலும் மீசியிலும் தடவிக்கொண்டு ஆடிருக்குமிடத்திற்போய் கைதட்டினால் பின்னால் தொடரும்.

ஆடு எழுந்திராத சாலம்.

ஏதென்று மந்திரத்தைப் பழிக்கவில்லை
யிருக்குதடா மந்திரங்கால் மறியேழுக்கால்
தோதப்பா தேவாங்கு உரித்ததோலை
தாகளாக ஆடிருக்கும் யிடமேதேடி
போதப்பா குழிதோண்டி புதைத்தையானால்
படுத்திருந்த ஆடெல்லாம் யெழுந்திராது
வாதப்பா சொல்லிடீ தெரிவிக்காதே
வையகத்தில் மகாத்துமாக்கள் கோடியுண்டு.

(வ-ம்) தேவாங்கை கொண்டுவந்து உயிர்மாற்றி தோலையுரித்து ஆடிருக்குமிடத்தில் கொண்டுபோய் புதைத்தால் படுத்திருந்த ஆடுகள் எழுந்திராதாம். 37

மிதியடி சாலம்.

கோடியிலே ஒருவனடா தொண்டுசெய்தோன்
குருவருளைப் பெற்றவனே அதிலேகோடி
ஆடவரும் நாடவரும் மதிக்கநீதான்
அப்பனே குளமில்லா மிதியடிக்கி
தேடியே விளாம்பிசினித் தூளாய்செய்து
திருநீற்றி லேகலந்து அடியிற்றாவி
நாடியே காலிரண்டும் அலம்பியேறி
நடக்கலாம் நாட்டிலுனை மதிப்பர்தானே.

(வ-ம்) விளாம்பிசினியை தூளாய்செய்து விபூதியில் மிச்சமாய்போட்டு கலந்துவைத்துக் கொண்டு குமிளில்லாத வெறும் பலகையாயுள்ள மிதியடியை கழுவி வைத்து இரண்டுகாலும் அலம்பி இந்தவிபூதியை பலகைமேல்தாவி ஏறிநடக்கலாம் இது சிலர் செய்தே யிருப்பார்கள். 38

பசியில்லாத சாலம்.

நாட்டிலே உனைமதிக்க யின்னோர்வித்தை
நாட்டுகிறே னன்பர்களே நயமாய்க்கேளீர்
வீட்டிலே வெட்டுநாள் அன்றுகாரம்
வேண்டாமல் புசியாமல் இருக்கலாகும்
ஏட்டிலே புளிகினு னென்று சொல்லி
பேசாதே நாயுருவி விறையுழக்கு

வாட்டியே பசும்பாலை விட்டுக்கிண்டி
வருந்தினவன் யெட்டுநா ளிருக்கலாமே.

(வ-ம்) நாயுருவி விதைகொண்டுவந்து அரைத்து பசும்பாலை விட்டு கூழாக்கிசாப்பிட அன்னாகார மில்லாம லிருக்கலாம் ஆனால் இது சிவயோகிகளுக்கு தகும் மற்றவர்க்கு தேகம் ஷீணமாம். 39

ஓட்டமாய் ஓடுஞ்சாலம்.

ஆமெனவே விழுதியிலை கொண்டுவந்து
அப்பனே வாயிலிட்டு மென்றடக்கி
ஓமெனவே ஒருமுனாரு ரசம்முழுங்கி
ஓடலாம் எவ்வளவு தூரமேனும்
நாமெனவே யின்றொருவர் தொடாமாட்டார்
தொடர்ந்தாலும் யிளைத்தலுத்து தோர்த்துபோவார்
நீயெனவே நிற்கவொரு யெண்ணங்கொண்டால்
நில்லப்பா காதவழி சென்றேயப்பால்.

(வ-ம்) விழுதியிலையை கொண்டுவந்து வாயில்போட்டு கசகச வென்றுமென்று அடக்கி துளிரசம் முழுங்கி மற்றதை வாயிலடக்கி ஓடினால் எவ்வளவுதூரம் ஓடினாலும் ஓடலாம் காதவழியும் ஓடலாம் நிற்கவேணுமானால் எதாகிலும் ஒருமரத்தை பிடித்து தான் நிற்கவேணும். 40

இரும்பை ஒடிக்குஞ் சாலம்.
கும்மி.

இரும்புக்கம்பி தனையெடுத்து-அதை
யீனுதவாழை மரநடுவே
பொருந்தமூன்றுநாள் வைத்துயெடுத்தால்
பொடியாயொடிக்கலாம் நேசர்களே.

(வ-ம்) ஒருசிறிய இரும்புகம்பியை வாழமரத்து நடுவில்சொருகிவைத்து மூன்றுநாள்சென்று எடுத்து ஒடித்தால் பளபள வென்று உடைந்துவிடும். 41

சுண்ணாம்பு தின்னுஞ்சாலம்.

சங்கம்விரைகொஞ்சம் வாயிலிட்டுநன்றாய்
சாயுத்துமென்று குழப்பிக்கொண்டு
பங்கமில்லாமலே சுண்ணாம்புதின்னலாம்
பத்தினால் மாத்துண்டு நேசர்களே.

(வ-ம்) சங்கம்விதையை கொஞ்சம் வாயிலிட்டு கசகசவென்று மென்று சுண்ணாம்புதின்னலாம் உள்ளுக்கு முழுக்கக்கூடாது அதிகமாய் மென்றுவிட்டால் மாத்துண்டு. 42

அ த ற் கு ம ா ற் று.

தின்பதுகொஞ்சமே சுண்ணாம்புசிலர்
நெரியாதுமிச்சமாய் மென்றுவிட்டால்
துன்புருமஞ்சள் உடனேவாயிலிட்டால்
துலைந்தது காரமும் நேசர்களே.

(வ-ம்) சுண்ணாம்பை யதிகமாய்த்தின்று வாய்வெந்தால் உடனே மஞ்சளை வாயிலிட்டு கசகசவென்றுமென்றால் காரந்துலையும் நேங்காய்பில்லை தின்பதுவழக்கம். 43

வாட்டிலோடு கடிக்குஞ்சாலம்.

வேளைவேரைக்கொஞ்சம் வாயிலிட்டு-அந்த
வாட்டிலோடு தன்னைகடித்தால்
பாலுஞ்சோறும் போலே மென்னலாகுமிது
பார்த்நார்வெகுபேர்கள் நேசர்களே.

(வ-ம்) வேளைவேரை வாயிலிட்டு மென்று அடக்கிவாட்டிலோடு பீங்கானோடுகள் போட்டு கடிக்கலாம் மெல்லலாம் அரிசிபோல் மாவாய்விடும் வாய்அறுக்காது.

துணிகொளுத்துஞ் சாலம்.

சல்லாவை சாருயந்தன்னில் தோய்த்து நடுச்
சபையிலே வைத்துக் கொளுத்திவிட்டால்
உல்லாசமாக யெறிந்து அணைந்தபின்
உதறியெடுக்கலாம் நேசர்களே.

(வ-ம்) ஒருசவுக்கத்தை சாராயத்தில் தோய்த்து சபையில் வைத்து கொளுத்திவிட்டால் அது எறிந்து அணைந்தபின் சவுக்கத்தை உதறிஎடுத்துக் கொள்ளலாம். 45

கோழிமுட்டை அழைக்குஞ்சாலம்.

வெள்ளையென்றகுண்டுமணி செடியின்வேறும்
விதமானபாவட்டை யிலைதானப்பா
வெள்ளைநிழமாடபிறு வெச்சத்தோடே
வேணுமடா பொன்னரி தாரந்தானும்
கொள்ளவேசமனிடையாய் கல்வத்திட்டு
கூட்டியேமைபோலே அரைத்துக்கொண்டு
மெள்ளவே அண்டத்தில் தடவிப்போடு
மேதினியில்புரளுமடா மந்திரமென்பார்

(வ-ம்) வெள்ளைகுண்டுமணி வடக்கோடும்வேறும் வெள்ளைமாடப்புறுபிச்சும் பொன்னரிதாரமும் பாவட்டையிலையும சமனி

டையாய்ச் சேர்த்து அறைத்து முட்டைமீதில் தடவி வாசலில் விட்டால் புரண்டுக் கொண்டேயிருக்கும் பார்ப்பவர்களெல்லா ரும் மென்பார். 46

முரத்தில் பொரி பொரிக்குஞ்சாலம்.

இதுபோலேமுச்சலொன்று செய்துக்கொண்டு
யிதற்கடியில் கள்ள அறை மறவாய்வைத்து
பதமாகப்பொறியதனை அறையில்போட்டு
பார்த்திருக்குஞ்சபையோர்க்கு நெல்லைகாட்டி
மெதுவாகசபைதனிலே குந்திக்கொண்டு
மெல்லியே தோர்சவுக்கத்தை கழுத்தில்கட்டி
விதமாகநீர்கொஞ்சந் தெளித்துக்கொண்டு
விடவிடென்று குலிக்கிடவே பொரியும்பாரே.

(வ-ம்) ஒருஜாண்ணிகளத்தில் அதற்குத்தக்கின அகலத்தில் ஒருமுச்சல்செய்து அடியில் கள்ள அறையோடே முடைய வேண்டியது அந்தகள்ள அறையில் புடித்தமட்டும் பொரியைபோட்டு வைத்துக்கொண்டு சபையில்வந்து உட்கார்ந்து ஒருசவுக்கத்தை கழுத்தில்கட்டி இரண்டுமுந்தாணியும் இரண்டுகால் பெருவிரலில் சுத்தி பிடித்து மேற்படிமுச்சலில் கொஞ்சம் நெல்லைப்போட்டு கொஞ்சம்தண்ணிதெளித்து பொரிப்பதுபோல் கலகலவென்று குலுக்கிக்கொண்டேயிருந்தால் அடியிலிருக்கும் பொரியெல்லாம் கீழுமேலுமாய் துள்ளிமேலுக்கு வந்துவிடும் பார்ப்பவர்க்கு ஆச்சரியமாயிருக்கும். 47

தண்ணிநிற்குஞ் சாலம்.

நடந்தபின்புயின்னமொரு ஜாலங்கேளு
நல்லமயிரோசனையும் முத்தக்காசும்
அடர்ந்ததொருநாற்கரந்தை யென்றவேரும்
அரசமரவேருடனே யிந்தநான்கும்
குடத்துள்ளேசமனிடையாய் அரைத்துப்பூசி
குளங்கிணற்றில்ஜலமதனை மொண்டுவந்து
அடர்ந்திருக்குஞ்சபைதனிலே கவிழ்த்துக்காட்டில்
அணுவளவும்ஜலங்கீழேவீழாதாமே.

(வ-ம்) மயிரோசனையும் நாற்கரந்தைவேரும் கோரைக்கிழங்கும் அரசமரத்தின்வேரும் சமனிடையாயெடுத்து அரைத்துக் குடத்துக்குள்ளேபூசி ஜலத்தைமொண்டு சபையில்வந்து கீழ் மேலாய்க்கவிழ்த்து காட்டினால் துளிஜெலங்கூட கீழேவிழாதென்று சொல்லுகிறார். 48

மூன்றும்பாகம்முற்றிற்று.

---